# அத்வைதாநுபூதி

(பிரத்யக்ஷமான அத்வைத அநுபவம் பற்றிக் கூறும் ப்ரகரணம்.)

**அஹமானந்த3ஸத்யாதி3லக்ஷண: கேவல: சிவ: ।**
**ஸதா3னந்தா3தி3ரூபம் யத் தேநாஹமசலோ(அ)த்வய ॥** 1

நான் ஆனந்தம், சத்யம் முதலியவைகளை லக்ஷணமாகக் கொண்டவனும், தனித்தவனும் (தனி ஒன்றானவனும்) சிவமுமானவன். அது (யாதொரு ப்ரம்மம்) ஸத், ஆனந்தம் முதலான ரூபமுடையதோ (அதே நான்) அதனால் நான் சலனமற்றவனாயும், இரண்டற்றவனாகவுமிருக்கிறேன்.

**அக்ஷிதோ3ஷாத்3 - யதை2கோ(அ)பி த்2வயத்3 - பா4தி சந்த்3ரமா: ।**
**ஏகோ(அ)ப்யாத்மா ததா2 பா4தி த்3வயவந்மாய்யா ம்ருஷா ॥** 2

சந்திரன் ஒன்றாக இருந்த போதிலும், கண்ணில் உள்ள தோஷத்தினால் எவ்விதம் இரண்டுபோலத் தோன்றுகின்றதோ; அவ்விதமே ஆத்மாவானது ஒன்றாக இருப்பினும், அக்ஞானத்தினால் பொய்யாக இரண்டாக இருப்பது போல் தோன்றுகிறது. (ஆத்மாவே பிரம்மம், ஜீவன் என்ற இரண்டு போல் தோன்றுகிறது.)

**அக்ஷிதோ3ஷவிஹீநாநாமேக ஏவ யதா2 சசீ ।**
**மாயாதோ3ஷவிஹீநாநாம் ஆத்மைவைகஸ்ததா2 ஸதா ॥** 3

சந்திரன் கண்ணில் குற்றமில்லாதவர்களுக்கு எவ்விதம் ஒன்றுதானோ, அவ்விதமே அக்ஞானமாகிற குற்றம் இல்லாதவர்களுக்கு எப்பொழுதும் ஆத்மா ஒன்று தான்.

**த்3வித்வம்பா4த்யக்ஷிதோ3ஷேண சந்த்3ரே ஸ்வே மாயயா ஜக3த் ।**
**த்3வித்வம் ம்ருஷா யதா2 சந்த்3ரே ம்ருஷா த்3வைதம் ததா3த்மனி ॥** 4

எவ்விதம் சந்திரனிடத்தில் கண்ணின் நோயால் இரண்டு என்ற தன்மை தோன்றுகின்றதோ, அவ்வாறு தன்னிடத்தில் (தன் ஸ்வரூபமான ஆத்மாவில்) உலகம் மாயையினால் (தோன்றுகின்றது.) எவ்வாறு சந்திரனிடத்தில் இரண்டு என்பது பொய்யோ, அவ்வாறே ஆத்மாவில் இரண்டு என்பது பொய்.

**ஆத்மந: கார்யமாகாசோ விநாத்மநம் ந ஸம்ப4வேத்**
**கார்யஸ்ய பூர்ணதா ஸித்3தா4 கிம் புன: பூர்ணதாத்மந: ॥** 5

ஆத்மாவிடமிருந்து உண்டான ஆகாயமானது ஆத்மாவை விட்டு இருக்காது. கார்யமான ஆகாயத்திற்கு பூர்ணத்வம் (எங்கும் பரவி இருத்தல்) பிரசித்த •மானது.

எனவே (காரணமான) ஆத்மாவிற்கு பூர்ணத்வம் (வியாபகத்வம்) இருப்பதைக் கூறவும் வேண்டுமா?

**கார்யபூ4தோ யதா2காச ஏக ஏவ நஹி த்3விதா ।**
**ஹேதுபூ4த ஸ்ததா2த்மாயமேக ஏவ விஜானத: ॥** 6

எவ்வாறு காரியமாக ஆன ஆகாயமானது ஒன்றுதானோ, இரண்டாக இல்லையோ, அவ்வாறே காரணமான இந்த ஆத்மாவானது அறிவாளிக்கு ஒன்றுதான்.

**ஏகோ(அ)பி த்3வயவத்3 பா4தி யதா2காச உபாதி4த: ।**
**ஏகோ(அ)பி த்3வயவத் - பூர்ணஸ்த்தா2த்மாயமுபாதி4த: ॥** 7

எவ்வாறு ஆகாயம் ஒன்றாக இருப்பினும், உபாதிகளால் இரண்டுபோல் தோன்றுகின்றதோ, அவ்வாறே வியாபகமான இந்த ஆத்மா ஒன்றாயினும் உபாதி ஸம்பந்தத்தால் இரண்டு போல் பிரகாசிக்கின்றது.

**காரணோபாதி4 சைதன்யம் கார்யஸம்ஸ்தா2ச்சிதோ(அ)திக4ம் ।**
**ந க4டாப்4ரான் - ம்ருதா3காச: குத்ரசித் நாதி4கோ ப4வேத் ॥** 8

காரணோபாதியான சைதன்யம் (மாயையுடன் கூடிய ஞானம்) அந்தக் கரணத்தை அடைந்த சைதன்யத்தைக்காட்டிலும் வேறாக ஆகாது. கடாகாசத் தைக்காட்டிலும் மண்ணைச்சேர்ந்த ஆகாசம் ஒருக்காலும் வேறாக ஆகாது.

**நிர்க3தோபாதி4ராகாச ஏக ஏவ யதா2 ப4வேத் ।**
**ஏக ஏவ ததா2த்மாயம் நிர்க3தோபாதி4க: ஸதா ॥** 9

எவ்வாறு ஆகாயமானது உபாதி ஸம்பந்தம் இல்லாத நிலைமையில் ஒன்றாகவே ஆகுமோ, அவ்வாறே இந்த ஆத்மா உபாதி ஸம்பந்தம் அற்றநிலையில் எப்பொழுதும் ஒன்றுதான்.

**ஆகாசாத3ன்ய ஆகாச: ஆகாசஸ்ய யதா2 நஹி ।**
**ஏகத்வாதா3த்மனோ நான்ய ஆத்4மா ஸித்3த்4யதி சாத்மந: ॥** 10

எவ்வாறு ஆகாயம் ஒன்றாயிருப்பதால், ஆகாசத்தைக் காட்டிலும் மற்றொரு ஆகாயம் இல்லையோ, அவ்வாறு ஆத்மாவானது ஒன்றாக இருப்பதால், ஆத்மாவைக் காட்டிலும் மற்றொரு ஆத்மா ஸித்திக்காது.

**மேக4யோகா3த்3 - யதா2 நீரம் கரகாகாரதாமியாத் ।**
**மாயாயோகா3த் ததை2வாத்மா ப்ரபஞ்சாகாரதாமியாத் ॥** 11

எவ்விதம் ஜலமானது மேகத்தின் சேர்க்கையினால் ஆலங்கட்டி உருவத்தை அடையுமோ, அவ்விதமே ஆத்மாவானது மாயையின் ஸம்பந்தத்தினால், உலகமாயிருக்கும் தன்மையை அடைகின்றது.

**வர்ஷோபல இவாபா4தி நீரமேவாப்4ரயோக3த: ।**
**வர்ஷோபலவிநாசேன நீரநாசோ யதா2 நஹி ॥** 12

**ஆத்மைவாயம் ததா2 பா4தி மாயாயோகா3த் ப்ரபஞ்சவத் ।**
**ப்ரபஞ்சஸ்ய விநாசேன ஸ்வாத்மநாசோ நஹி க்வசித் ॥** 13

எவ்விதம் ஜலமே மேகத்தின் சேர்க்கையினால் ஆலங்கட்டி போன்று தோன்றுகின்றதோ ஆலங்கட்டியின் அழிவினால் ஜலத்திற்கு அழிவு இல்லையோ, அவ்விதம் இந்த ஆத்மாவே மாயையின் ஸம்பந்தத்தினால் உலகம் போன்று தோன்றுகின்றது. அத்தகைய உலகத்தின் அழிவினால், தன் ஆத்மாவிற்கு அழிவானது ஒருபொழுதும் உண்டாகாது.

**ஜலாத3ன்ய இவாபா4தி ஜலோத்தோ2 பு3த்3பு3தோ3 யதா2 ।**
**ததா2த்மன: ப்ருத2கி2வ ப்ரபஞ்சோ(அ)யமநேகதா4 ॥** 14

**யதா2 பு3த்3பு3த3நாசேன ஜலநாசோ ந கர்ஹிசித் ।**
**ததா3 ப்ரபஞ்சநாசேன நாச: ஸ்யாதாத்மநோ நஹி ॥** 15

எவ்விதம் ஜலத்திலிருந்து உண்டான குமிழியானது ஜலத்தைக் காட்டிலும் வேறாக உள்ளது போல் தோன்றுகிறதோ, அவ்விதமே பலவாறாக உள்ள இந்த உலகமானது ஆத்மாவைக் காட்டிலும் வேறானது போன்று தோன்றுகிறது.

எவ்வாறு குமிழியின் நாசத்தினால் ஒருபொழுதும் ஜலத்திற்கு நாசம் இல்லையோ, அவ்விதமே உலகத்தின் அழிவினால் ஆத்மாவிற்கு நாசம் கிடையாது.

**அஹிநிர்ல்வயனீஜாத: சுச்யாதி3ர் நாஹிமாப்னுயாத் ।**
**ததா3 ஸ்தூ2லாதி3ஸம்பூ4த சுச்யாதி3ர் நாப்னுயாதி3மம் ॥** 16

(கழற்றப்பட்ட) பாம்புச் சட்டையில் உண்டான அக்னி முதலியவை (ஒரு பாம்பு சட்டை உரித்த பின் அச்சட்டையைத் தீப்பற்றினால்) பாம்பை (அந்தத் தீ முதலியன) எப்படிப் பற்றாவோ, அவ்விதமே ஸ்தூலம் முதலிய சரீரங்களில் உண்டான சுத்தம் (அசுத்தம்) முதலியவை இந்த ஆத்மாவைச் ஸம்பந்திக்காது.

(சுசி என்பது நெருப்பு, சுத்தம் என்ற இரு பொருள்களில் உபயோகிக்கப் பட்டுள்ளது.)

**த்யக்தாம் த்வசமஹிர் யத்3வதா4த்மத்வேன ந மன்யதோ ।**
**ஆத்மத்வேன ஸதா3ஜ்ஞானீ த்யக்ததே3ஹத்ரயம் ததா2 ॥** 17

எவ்வாறு பாம்பு கழற்றப்பட்ட சட்டையை "தான்" ஆக எண்ணாதோ, அவ்விதமே ஞானியானவன் அபிமானம் துறந்து விட்ட ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை ஒரு பொழுதும் ஆத்மாவாக எண்ணமாட்டான்.

**அஹிநிர்ல்வயநீநாசாத3ஹேர் நாசோ யதா2 ந ஹி ।**
**தே3ஹத்ரயவிநாசேன நாத்மநாசஸ்த்தா2 ப4வேத் ॥** 18

எவ்விதம் பாம்புச்சட்டையின் அழிவினால் பாம்பிற்கு அழிவு இல்லையோ, அவ்விதமே, மூன்று தேகங்களின் அழிவினாலும் ஆத்மாவிற்கு நாசம் ஏற்படாது.

**தக்ராதி3 லவணோபேதமஜ்ஞைர் லவணவத் யதா2 ।**
**ஆத்மா ஸ்தூ2லாதி ஸம்யுக்தோ த்3ருச்யதே ஸ்தூ2லகாதி3வத் ॥** 19

உப்புடன்கூடிய மோர் முதலியவை உப்புச் சுவையுடன் கூடியதாக எவ்விதம் அறிவற்றவர்களால் காணப்படுகின்றதோ, அவ்விதம் ஸ்தூலம் முதலிய சரீரங்களுடன்கூடிய ஆத்மாவானது, ஸ்தூலம் ஆகியவற்றுக்கான தர்மங்களுடன் கூடியதாகத் தவறாக எண்ணப்படுகின்றது.

(மோரின் உப்புச்சுவை அதற்கே இயல்பான தெனத் தவறாக எண்ணுவது போலத்தான், ஆத்மாவுக்கு மூவித சரீர லக்ஷணங்களைக் கற்பிப்பது.)

**அய: காஷ்டா2தி3கம் யத்3வத்3 - வந்ஹிவத்3 - வந்ஹியோக3த: ।**
**பா4தி ஸ்தூ2லாதி3கம் ஸர்வமாத்மவத் ஸ்வாத்மயோக3த: ॥** 20

எவ்வாறு இரும்பு, விறகு முதலியவை அக்னியின் சேர்க்கையினால் அக்னி போன்று பிரகாசிக்கின்றதோ, அவ்விதமே ஸ்தூலம் முதலிய எல்லாம் தன் ஆத்மாவின் ஸம்பந்தத்தினால், ஆத்மாவைப்போன்று பிரகாசிக்கின்றது.

**தா3ஹகோ நைவ தா3ஹ்யம் ஸ்யாத் தா3ஹ்யம் தத்வத் ந தா3ஹக: ।**
**நைவாத்மா(அ)யமநாத்மா ஸ்யாத் (அ)நாத்மாயம் ந சாத்மக: ॥** 21

(எவ்விதம்) எரிக்கும் பொருள் எரிக்கப்படும் பொருளாக ஆகாதோ, எரிக்கப்படும் பொருள் எரிக்கும் பொருளாகவும் ஆகாதோ, அது போன்று இந்த ஆத்மாவானது அநாத்மாவாக (ஜடமாக) வும், இந்த ஆத்மாவிற்கு வேறான ஜடப்பொருள் ஆத்மாவாகவும் ஆகாது.

**ப்ரமேயாதி3 த்ரயம் ஸார்த3ம் பா4நுநா க4ட குட்4யவத்**
**யேந பா4தி ஸ ஏவாஹம் ப்ரமேயாதி3விலக்ஷண: ॥** 22

ப்ரமேயம் முதலான மூன்றும் (ப்ரமேயமான பொருள்கள், பிரமாணமான அறிவு, ப்ரமாதாவான அறிபவன் (ஒரே சமயத்தில் சூரியனால் குடம், சுவர் இவைகள் போல் எந்த ஆத்மாவினால் விளங்குகின்றதோ, ப்ரமேயம் முதலிய வற்றைக்காட்டிலும் வேறான அந்த ஆத்மாவே நான்.

(சூரியனால் குடம், சுவர் முதலியவை ஒரே சமயத்தில் விளங்குகின்றது. அவைகளைவிட சூரியன் வேறானவனே, அவ்வாறே ப்ரமேயம் (அறியப்படும் பொருள்) ப்ரமாணம் (அறிவு) ப்ரமாதா (அறிகின்றவன்) ஆகிய மூன்றும் ஒரே சமயத்தில் எதனால் விளங்குகின்றதோ அது அவற்றினின்றும் வேறுபட்டது. அதையே ஸாக்ஷி என்பர். அந்த ஸாக்ஷியே நான்.)

**பா4னு ஸ்பு3ரணதோ யத்3வத் ஸ்பு2ரதீவ க4டாதி3கம்**
**ஸ்பு2ரதீவ ப்ரமேயாதி3ராத்மஸ்புரணதஸ்ததா2 ||** 23

எவ்வாறு சூரியனது பிரகாசத்தினால் குடம் முதலியவை (தாமே) பிரகாசம் உடையவை போல இருக்கின்றதோ, அவ்விதமே ப்ரமேயம் முதலியவை ஆத்மாவின் பிரகாசத்தினால் தாமே பிரகாசிப்பவை போன்று தோன்றுகின்றது.

(சூரியன் ஒளியினால் விளங்கும் குடம் முதலியவை, தானே பிரகாசிப்பதாகத் தோன்றுவது போல், ஆத்மாவின் பிரகாசத்தினாலேயே விளங்குகின்ற ப்ரமேயம் முதலானவை தாங்களே ப்ரகாசிப்பவை போலத் தோன்றுகின்றன.)

**பிஷ்டாதி3ர் - கு3ளஸம்பர்காத் கு3ளவத் ப்ரீதிமான் யதா2**
**ஆத்மயோகா3த் ப்ரமேயாதி3ராத்மவத் ப்ரீதிமான் ப4வேத் ||** 24

மாவு முதலியவை எவ்விதம் வெல்லத்தின் சேர்க்கையால் வெல்லம் போன்று பிரியத்தை உண்டுபண்ணுகின்றதாக ஆகின்றதோ, அவ்விதம் ப்ரமேயம் முதலியவை ஆத்மாவின் ஸம்பந்தத்தினால், ஆத்மாவினிடத்தினில் போல் பிரீதீ கொள்ளத்தக்கதாக ஆகின்றது.

**க4ட நீரான்ன பிஷ்டாநாமுஷ்ணத்வம் வஹ்னியோக3த: |**
**வஹ்னிம் விநா கத3ம் தேஷாமுஷ்ணதா ஸ்யாத்3யதா2 க்வசித் ||** 25

**பூ4தபெ4ளதிகதேஹாநாம் ஸ்பூ2ர்திதா ஸ்வாத்மயோக3த: |**
**விநாத்மானம் கத2ம் தேஷாம் ஸ்பூ2ர்திதா ஸ்யாத் ததா2 க்வசித் ||** 26

பானை (அதில் இட்ட) ஜலம், அன்னம், மாவு இவைகளுக்கு அக்னியின் ஸம்பந்தத்தினால் சூடு உண்டாகிறது. அவைகளுக்கு அக்னி இல்லாமல் ஒரு இடத்திலாவது (தமக்கேயென) சூடு எவ்வாறு உண்டாகும்? இது எவ்வாறோ அவ்வாறே பூதங்கள் (பூமி முதலியவை) அவைகளின் காரியங்கள், தேஹங்கள் இவைகளுக்கு ஆத்மாவின் ஸம்பந்தத்தினாலேயே விளக்கம் உண்டாகின்றது.

அவைகளின் பிரகாசமானது ஆத்மா இல்லாமல் ஒரு இடத்திலாவது எப்படி உண்டாகும்?

**நாநாவிதே4ஷு கும்பே4ஷூ வஸத்யேகம் நபோ யத2ர |**
**நாநாவிதே4ஷு தே3ஹேஷு தத்3வதே3கோ வஸாம்யஹம் ||** 27

எவ்விதம் பலவிதமான குடங்களில் ஒரே ஆகாயம் இருக்கின்றதோ, அது போல பல விதமான சரீரங்களில் நான் ஒருவனே வசிக்கிறேன்.

எவ்வாறு பல விதமான குடங்களில் உள்ள ஆகாசம் ஒன்றோ, அவ்வாறே பலவித தேஹங்களிலும் நான் ஒருவனே ஆத்மாவாக வசிக்கின்றேன்.

**நாநாவித4த்வம் குத்பா4னாம் ந யாத்யேவ யதா2 நப4: |**
**நாநாவித4த்வம் தே3ஹானாம் தத்3வதே3வ ந யாம்யஹம் ||** 28

எவ்விதம் ஆகாயமானது குடங்களுடைய பல விதத் தன்மையை அடைவதில்லையோ, அதுபோல் நான் சரீரங்களுடைய பலவிதத் தன்மையை அடைவதில்லை.

**யதா2 க4டேஷு நஷ்டேஷு க4டாகாசோ ந நச்யதி |**
**ததா2 தே3ஹேஷு நஷ்டேஷு நைவ நச்யாமி ஸர்வக3: ||** 29

எவ்விதம் குடங்கள் அழியும்பொழுது, குடங்களிலுள்ள ஆகாயம் அழிவ. தில்லையோ அவ்விதம் சரீரங்கள் அழியும் பொழுது, எங்கும் நிறைந்த "நான்" அழிவதில்லை.

**உத்தமாதீ3னி புஷ்பாணி வர்த்தந்தே ஸூத்ரகே யதா2 |**
**உத்தமாத்3யாஸ்ததா2 தே3ஹா வர்த்தந்தே மயி ஸர்வதா3 ||** 30

எவ்விதம் நூலில் (நாரில்) உயர்ந்தது, நடுத்தரம், தாழ்ந்தது முதலான புஷ்பங்கள் இருக்கின்றனவோ, அவ்விதமே உத்தம, மத்யம, அதம முதலிய சரீரங்கள் என்னிடத்தில் எப்பொழுதும் இருக்கின்றன.

(பலவிதப் பூக்களை ஒரே நாரில் தொடுப்பதுபோல, ஒரே ஆத்மாவில் எல்லா சரீரங்களும் தொடுக்கப்பட்டுள்ளது.)

**யதா2 ந ஸம்ஸ்ப்ருசேத் ஸூத்ரம் புஷ்பாணாமுத்தமாதி3தா |**
**ததா2 நைகம் ஸர்வக3ம் மாம் தே3ஹாநாமுத்தமாதி3தா ||** 31

**புஷ்பேஷூ தேஷு நஷ்டேஷு யத்3வத் ஸூத்ரம் ந நச்யதி |**
**ததா2 தே3ஹேஷு நஷ்டேஷு நைவ நச்யாம்யஹம் ஸதா3 ||** 32

எவ்விதம் நூலைப் (நார்) பூக்களுடைய உயர்ந்தது, நடுவானது, தாழ்ந்தது முதலிய தன்மை ஒட்டாதோ, அவ்விதம் ஒன்றான வனும் எங்கும் நிறைந்தவனு மான என்னை சரீரங்களுடைய மேல், நடு, தாழ்ந்தது முதலிய தன்மை ஒட்டாது.

எவ்விதம் அந்தப் பூக்கள் அழிந்தபொழுதும் நால் (நார்) அழிவதில்லையோ அவ்விதம் சரீரங்கள் அழிந்த பொழுதும் நான் எப்பொழுதும் அழிவதே இல்லை.

**பர்யங்கரஜ்ஜூரந்த்$^{4}$ரேஷு நாநேவைகாபி ஸூர்யபா$^{4}$ ।**
**ஏகோ(அ)ப்யநேகவத் பா$^{4}$தி ததா$^{2}$ க்ஷேத்ரேஷு ஸர்வக$^{3}$: ॥ 33**

எவ்விதம் சூரிய வெளிச்சம் ஒன்றாயினும், ஊஞ்சல் சங்கிலிகளின் இடை களில் (இழைகள் வழியாக வரும்போது) அநேகம்போல் தோன்றுகின்றதோ அவ்விதம் எங்கும் நிறைந்த ஆத்மா ஒன்றாக இருப்பினும், சரீரங்களில் அநேகம் போலத் தோன்றுகின்றது.

**ரஜ்ஜூரந்த்$^{4}$ரஸ்த$^{4}$ தோ$^{3}$ஷாதி$^{3}$ ஸூர்யபா$^{4}$ம் ந ஸ்ப்ருசேத் யதா$^{2}$ ।**
**ததா$^{2}$ க்ஷேத்ரஸ்த$^{2}$ தோ$^{3}$ஷாதி$^{3}$ ஸர்வக$^{3}$ம் மாம் ந ஸம்ஸ்ப்ருசேத் ॥ 34**

எவ்வாறு ஊஞ்சல் சங்கிலியின் தோஷம் முதலியவை சூரியபிரகாசத்தை தொடாதோ, அவ்வாறு சரீரங்களிலுள்ள குற்றம் முதலியவை எங்கும் நிறைந்த என்னைத் தொடுவதில்லை.

**தத்$^{3}$ரஜ்ஜு ரந்த்$^{4}$ர நாசேஷு நைவ நச்யதி ஸூர்யபா$^{4}$ ।**
**ததா$^{2}$ க்ஷேத்ர விநாசேஷு நைவ நச்யாமி ஸர்வக$^{2}$: ॥ 35**

எவ்விதம் சூரியப்பிரகாசம் அந்த ஊஞ்சல் சங்கிலியின் இடைவெளி நாசமான பொழுது அழிவதில்லையோ, அவ்விதம் சரீரங்களின் அழிவினால் எங்கும் நிறைந்த நான் அழிவதில்லை.

**தே$^{3}$ஹோ நாஹம் ப்ரத்$^{3}$ருச்யத்$^{3}$வாத் பெ$^{4}$ளதிகத்வாத் ந சேந்த்ரியம் ।**
**ப்ராணோ நாஹமநேகத்வாத் மநோ நாஹம் சலத்வத: ॥ 36**

**பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ர் நாஹம் விகாரித்வாத் தமோ நாஹம் ஜட$^{3}$த்வத: ।**
**தே$^{3}$ஹேந்த்$^{3}$ரியாதி$^{3}$கம் நாஹம் விநாசித்வாத் க$^{4}$டாதி$^{3}$வத் ॥ 37**

சரீரம் (தனக்கு வேறாகப்) பார்க்கப்படுகிறபடியால் (அது பார்ப்பவனாக)" நான் "(ஆத்மா) இல்லை. புலனும் பஞ்சபூதங்களால் உண்டாகியிருப்பதால் ஆத்மா இல்லை. மனம் சலனமுள்ளதாகையால் ஆத்மா இல்லை. புத்தி மாறுதல்கள் அடைவதால், ஆத்மா இல்லை. அஞ்ஞானம் அசேதனமானதால் ஆத்மா இல்லை. இவ்வாறு தேகம், இந்திரியம் முதலியன குடம் முதலியவை போன்று அழியும் தன்மையுடையதால் ஆத்மா இல்லை. (குடத்துள் உள்ள ஆகாயம் அழிவுறாதது போலவே, தேஹேந்திரியங்களின் உள்ளே இருக்கும் ஆத்மா.)

**தே3ஹேந்த்3ரிய ப்ராண மநோ பு3த்3த்4யஜ்ஞாநானி பா4ஸயன் ।**
**அஹம்காரம் ததா2 பா4மி சைதேஷாமபி4மாநினம் ॥** 38

சரீரம், புலன்கள் பிராணன்கள், மனது, புத்தி, அஞ்ஞானம் இவைகளையும் அவ்விதமே இவைகளில் "நான்" என்ற பற்றுதல் உள்ள அஹங்காரத்தையும் பிரகாசிக்கச் செய்து கொண்டு பிரகாசிக்கின்றேன்.

**ஸர்வம் ஜக3தி3த3ம் நாஹம் விஷயத்வாதி3த3ம்தி4ய: ।**
**அஹம் நாஹம் ஸுஷுப்த்யாதௌ3 அஹம: ஸாக்ஷித: ஸதா3 ॥** 39

இந்த எல்லாப் பிரபஞ்சமும் "இது" என்று (தனக்கு வேறாக) புத்திக்கு விஷயமாவதால் " நான்" இல்லை. நான் தூக்கம் முதலியவைகளில் அஹங்காரத் திற்கு எப்பொழுதும் ஸாக்ஷியாக இருப்பதால், அஹங்காரமும் ஆத்மா இல்லை.

**ஸுப்தௌ யதா2 நிர்விகாரஸ் ததா2வஸ்தா2 த்3வயே(அ)பிச ।**
**த்3வயோர் மாத்ராபி4யோகே3ன விகாரீவ விபா4ம்யஹம் ॥** 40

நான் ஸுஷுப்தியில் (தூக்கத்தில்) எவ்விதம் விகார மற்றவனோ, ஜாக்ரத் (விழிப்பு) ஸ்வப்னம் (கனவு என்ற) இரண்டு அவஸ்தைகளிலும், அவ்வாறே (விகாரமற்றவன்). ஜாக்ரத், ஸ்வப்நம் இரண்டிலும், விஷயங்களின் ஸம்பந்தத் தினால் மாறுதல் உள்ளவன் போல நான் தோன்றுகின்றேன்.

**உபாதி4 நீல ரக்தாத்3யை: ஸ்ப2டிகோ நைவ லிப்யதே ।**
**ததா2த்மா கோசஜை: ஸர்வை: காமாத்3யைர் நைவ லிப்யதே ॥** 41

எவ்விதம் உபாதிகளில் உள்ள (நீல புஷ்பம், சிவப்பு புஷ்பங்களிலுள்ள) கருப்பு, சிவப்பு முதலிய நிறங்களுடன் ஸ்படிகமணி ஒட்டுவதில்லையோ, அவ்விதம் ஆத்மா ஐந்து கோசங்களால் உண்டான ஆசை முதலிய எவற்றுடனும் ஒட்டுவதில்லை.

(ஸ்படிக லிங்கத்துக்குப் பலவர்ண மலர்களைச் சூட்டினால், ஸ்படிகத்தின் மூலமே அவை தெரிந்தாலும் கூட அவற்றின் வர்ணத்தால், ஸ்படிகம் பாதிக்கப் படுவதில்லை.)

**பா2லேந ப்4ராம்யமாணேந ப்4ரமதீவ யதா2 மஹீ ।**
**அகோ3(அ)ப்யாத்மா விமூடே4ன சலதீவ ப்ரத்ருச்யதே ॥** 42

எவ்விதம் பூமியானது தலைசுற்றும் பொழுது சுழலுவது போல் இருக்கின்றதோ, அவ்விதம் ஆத்மா சலனமற்றதாயினும் அறிவில்லாதவனால் சலன முடையது போன்று பார்க்கப்படுகின்றது.

**தே3ஹத்ரயமித3ம் நித்யமாத்மத்வே நாபி4மன்யதே ।**
**யாவத் தாவத3யம் மூடோ4 நாநாயோநிஷு ஜாயதே ॥** 43

இந்த அக்ஞானி, இந்த ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை எப்பொழுதும் ஆத்மாவாக எதுவரை அபிமானிக்கிறானோ அதுவரை பல கருக்களில் பிறக்கிறான்.

**நித்3ராதே3ஹஜ து3:கா2தி3ர் ஜாக்ரத்3தே3ஹம் ந ஸம்ஸ்ப்ருசேத் ।**
**ஜாக்3ரத்3- தே3ஹஜ து3: கா2தி4ஸ்ததா2த்மாநம் ந ஸம்ஸ்ப்ருசேத் ॥** 44

எவ்விதம் ஸ்வப்ன சரீரத்திலுண்டான சுகதுக்கங்கள், விழிப்பு நிலையிலுள்ள சரீரத்தைச் சாருவதில்லையோ, அவ்விதம் விழிப்பு நிலையிலுள்ள சரீரத்தி லேற்பட்ட சுகதுக்கங்கள் ஆத்மாவைச் சாருவதில்லை.

**ஜாக்3ரத்4 - தே3ஹவதா3பா4தி நித்3ரா தே3ஹஸ்து நித்3ரயா ।**
**நித்3ராதே3ஹ விநாசேன ஜாக்ரத்3தே3ஹோ ந நச்யதி ॥** 45

**ததா2யமாத்மவத் பா4தி ஜாக்3ரத்3 - தே3ஹஸ்து ஜாகராத் ।**
**ஜாக்3ரத்3- தே3ஹ விநாசேன நாத்மா நச்யதி கர்ஹிசித் ॥** 46

நித்திரை (யிலுண்டாகும் ஸ்வப்ன) சரீரமானது, ஸ்வப்னத்தில், ஜாக்ரத் (விழிப்பு) நிலையின் சரீரம் போன்றே தோன்றுகின்றது. (இந்த) ஸ்வப்ன தேஹ நாசத்தினால், ஜாக்ரத் நிலையிலுள்ள சரீரம் அழிவதில்லை.

அதுபோன்று இந்த விழிப்பிலுள்ள சரீரமும், விழிப்பில் ஆத்மாவைப்போல் தோன்றுகின்றது. விழிப்பிலுள்ள சரீர நாசத்தினால் ஆத்மா ஒரு பொழுதும் அழிவதில்லை.

**ஹித்வாயம் ஸ்வாப்நிகம் தே3ஹம் ஜாக்3ரத்3தே3ஹமபேக்ஷதே ।**
**ஜாக்3ரத்3தே3ஹப்ரபு3த்2தோ4(அ)யம் ஹித்வாத்மாநம் யதா2 ததா2 ॥** 47

எவ்விதம் இந்த ஜீவன் ஸ்வப்னத்திலுண்டான சரீரத்தை விட்டுவிட்டு, விழிப்பிலுள்ள சரீரத்தை அடைகின்றானோ, அவ்விதமே விழிப்பிலுள்ள சரீரத்தை ஞான விழிப்பு பெற்றவுடன், இவன் ஆத்மாவை எய்துகிறான்.

**ஸ்வப்நபோ4கே3 யதை2வேச்சா2 ப்ரபு3த்3த4ஸ்ய ந வித்3யதே ।**
**அஸத்ஸ்வர்கா3தி3கே போ4கே3 நைவேச்சாஜ்ஞானினஸ்ததா2 ॥** 48

எவ்விதம் ஸ்வப்னா நுபவத்தில் விழிப்படைந்தவனுக்கு ஆசையானது ஏற்படுவதில்லையோ, அவ்விதம் ஞானிக்கு பொய்யான ஸ்வர்க்கம் முதலான போகத்தில் ஆசை உண்டாவதில்லை.

(கல்லில் நாகப்ரதிஷ்டை செய்தால், செய்பவன் தான் அதை நாகமாக அநுபவிக்கிறானேயன்றி, கல் தன்னை நாகமாக உணர்வதில்லை. இவ்வாறே ஜீவனின் சரீரம், நடத்தை முதலியனவும் தம்மளவில் கல் போல ஜடம் தான். இவற்றை அனுபவிக்கும் ஆத்மாவுக்கே இவை போக்யம்.)

**போ4க்த்ரா ப3ஹிர் யதா2 போ4க்3ய: ஸர்போ த்3ருஷதி3 கல்பித: |**
**ரூபசீலாத3யச்யாத்ம போ4கா3 போ4க்3ய ஸ்வரூபகா: ||** 49

எவ்வாறு வெளியில், அனுபவிக்கிறவனால், கல்லில் கல்பிக்கப்பட்ட ஸர்ப்பம் போக்ய வஸ்துவோ, (அவ்வாறே) ஆத்மாவில் போகத்தைத் தருகின்ற ரூபம், சீலம் முதலியவைகளும் போக்ய வஸ்துக்களே.

**ஜ்ஞஸ்ய நாஸ்த்யேவ ஸம்ஸாரோ யத்3வத3க்ஜ்ஞஸ்ய கர்மிண: |**
**ஜானதோ நைவ பீ4ர்யத்3வத் - ரஜ்ஜுஸர்பமஜானத: ||** 50

ஸம்ஸாரமானது, அக்ஞானியான கர்மிக்கு (ஞான உபாயமாயின்றி கர்மாவையே லஷ்யமாகக் கொள்பவனுக்கு) எவ்வி தமிருக்கின்றதோ, (அதாவது பயங்கரமாயிருப்பது போல) (அவ்விதம்) ஞானிக்கு இராது. எவ்விதம் கயிற்றில் பாம்பை அறியாதவனுக்கு பயம் உண்டாகிறதோ (அவ்விதம்) அறிந்தவனுக்கு பயம் ஏற்படுவதில்லை.

**ஸைந்த4வஸ்ய க4நோ யத்3வத் ஜலயோகாத் ஜலம் ப4வேத் |**
**ஸ்வாத்மயோகா3த் ததா2 பு3த்3தி4ராத்மைவ ப்3ரஹ்மவேதி3ந: ||** 51

எவ்விதம் உப்புக்கட்டியானது ஜலத்தின் சேர்க்கையினால் ஜலமாக ஆகுமோ, அவ்விதமே பிரம்மத்தை அறிந்தவனுடைய புத்தியானது, தன் ஆத்ம ஸம்பந்தத்தினால் ஆத்ம ஸ்வரூபமாகவே ஆகின்றது.

(ஜலத்தில் போடப்பட்ட உப்புக்கட்டி ஜலமாக ஆவது போல், ப்ரஹ்மக் ஞானியின் புத்தியும் ஆத்மஞானத்தால் ஆத்மாவாகவே ஆகிவிடுகின்றது.)

**தோயாச்ரயேஷு ஸர்வேஷு பா4நுரேகோ(அ)ப்யநேகவத் |**
**ஏகோ(அ)ப்யாத்மா ததா2 பா4தி ஸர்வக்ஷேத்ரேஷ்வநேகவத் ||** 52

எவ்விதம் சூரியன் ஒருவனாயினும் எல்லா நீர்நிலைகளிலும், அநேகம் போல் தோன்றுகின்றதோ, அவ்விதம் ஆத்மா ஒன்றான போதிலும் எல்லா சரீரங்களிலும் அநேகம் போல தோன்றுகின்றது.

**பா4நோரன்ய இவாபா4தி ஜலபா4னுர்ஜலே யதா2 |**
**ஆத்மநோ(அ)ன்ய இவாபா4ஸோ பா4தி புத்3தௌ ததா2த்மந: ||** 53

எவ்விதம் ஜலத்தில் பிரதிபிம்ப சூரியன் (ஆகாச) சூரியனைக்காட்டிலும் வேறான துபோல் தோன்றுகின்றதோ, அவ்விதம் புத்தியில் ஆத்மாவினுடைய பிரதிபிம்பமானது ஆத்மாவைக் காட்டிலும் வேறானது போன்று தோன்றுகின்றது.

**பி3ம்ப3ம் விநா யதா3 நீரே ப்ரதிபி3ம்போ3 ப4வேத் கத2ம் |**
**விநாத்மானம் ததா2 பு3த்3தெ4ள சிதா3பா4ஸோ ப4வேத் கத2ம் ||** 54

பிம்பம் (உருவம்) இல்லாமல் ஜலத்தில் பிரதிபிம்பமானது எப்படி உண்டாகும்? இது எவ்விதமோ, அவ்விதம் ஆத்மா இல்லாமல் புத்தியில் சைதனயத்தின் பிரதிபிம்பம் எவ்விதம் உண்டாகும்?

**ப்ரதிபி3ம்ப3சலத்வாத்2யா யதா2 பி3ம்ப3ஸ்ய கர்ஹிசித் ।**
**ந ப4வேயுஸ்ததா2பா4ஸகர்த்ருத்வாத்3 யாஸ்து நாத்மன: ॥** 55

எவ்விதம் பிரதிபிம்பத்தில் உள்ள அசைவு (ஜலம் ஆடும் போது, பிரதிபிம்ம ஸூரியனும் ஆடுவது) முதலியவை பிம்பத்திற்கு ஒரு பொழுதும் உண்டாகாதோ, அவ்விதம் அந்தக்கரணப் பிரதி பிம்பத்தில் உள்ள கர்த்ருத்வம் முதலியன ஆத்மாவிற்கு ஏற்படுவதில்லை.

**ஜலே சைத்யாதி3கம் யத்3வத் ஜலபாநும் ந ஸம்ஸ்ப்ருசேத் ।**
**புத்3தே4 கர்மாதி3கம் தத்3வத் சிதா3பா4ஸம் ந ஸம்ஸ்ப்ருசேத் ॥** 56

எவ்வாறு தண்ணீரில் உள்ள குளிர்ச்சி முதலியன தண்ணீரில் பிரதிபலிக்கும் சூரியனைத் தொடாதோ, அவ்வாறே அந்தக்கரணத்தின் கிரியை முதலியன சைதன்ய பிரதிபிம்பத்தை (ஜீவனை) தொடாது.

**பு3த்3தே4: கர்த்ருத்வ போ4க்த்ருத்வ து3:கி2த்வாத்3யைஸ்து ஸம்யுத: ।**
**சிதா3பா4ஸோ விகாரீவ சராவஸ்தா2ம்பு பா4நுவத் ॥** 57

அந்தக்கரணத்தினுடைய கர்த்ருத்வம், போக்த்ருத்வம், துக்கிப்பது முதலியவைகளுடன் கூடிய ஞானப் பிரதிபிம்பனான ஜீவனோவெனில், சட்டியில் உள்ள ஜலத்தில் தோன்றும் சூரிய பிரதிபிம்பம் போன்று, மாறுதல் உடையவன் போலத் தோன்றுகிறான்.

(சட்டியில் உள்ள ஜலத்தில் தோன்றும் சூரியப்ரதிபிம்பம் ஜலத்தின் சலனத்தினால் சலிப்பது போல் தோன்றுகின்றது. அதேபோன்று புத்தியின் கர்த்ருத்வம், போக்த்ருத்வம், சுகம், துக்கம் இவைகளுடன் கூடிய சிதாபாஸனும் இவற்றுடன் கூடியவன் போல் தோன்றுகின்றான்.)

**சராவஸ்தோ2த3கே நஷ்டே தத்ஸ்தோ2 பா4னுர் விநஷ்டவத் ।**
**பு3த்3தோ4லயே ததா2 ஸுப்தௌ நஷ்டவத் ப்ரதிபா4த்யயம் ॥** 58

எவ்விதம் சட்டியில் உள்ள தண்ணீர் இல்லாமற்போனதும், அதிலுள்ள சூரியனும் இல்லாமற்போனது போன்று (தோன்றுகின்றதோ) அவ்விதம் ஸுஷுப்தியில் (தூக்கத்தில்) புத்தியினுடைய. ஒடுக்கம் ஏற்பட்டபொழுது, இந்த ஆத்மாவும் இல்லாதது போன்று தோன்றுகின்றது.

**ஜலஸ்தா2ர்கம் ஜலம் சோர்மிம் பா4ஸயன் பா4தி பா4ஸ்கர: ।**
**ஆத்மாபா4ஸம் தி4யம் புத்3தே4: கர்த்ருத்வாதீ3னயம் ததா2 ॥** 59

எவ்விதம் சூரியன் ஜலத்திலுள்ள பிரதிபிம்ப சூரியனையும், ஜலத்தையும் (ஜல சூர்யனை அசைப்பிக்கும்) அலையையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு தானும் பிரகாசிக்கிறானோ, அவ்விதம் இந்த ஆத்மாவும் தன் பிரதிபிம்பத்தையும் புத்தியையும், புத்தியினுடைய கர்த்ருத்வம் முதலியவைகளையும் பிரகாசிக்கச் செய்து கொண்டு தானும் பிரகாசிக்கிறான்.

**மேகா4வபா4ஸகோ பா4நுர் மேக4ச்ச2ந்நோ(அ)வபா4ஸதே |**
**மோஹாவபா4ஸகஸ் தத்3வன் மோஹச்ச2ந்நோ விபா4த்யயம் ||** 60

எவ்விதம் மேகத்தைப் பிரகாசிக்கச் செய்யும் சூரியன், மேகத்தினால் மறைக்கப்பட்டு இருக்கிறானோ அது போன்று, அக்ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்கின்ற இந்த ஆத்மா, அக்ஞானத்தினால் மறைக்கப்பட்டவனாக விளங்குகிறான்.

**பா4ஸ்யம் மேகா3தி3கம் பா4நுர் பா4ஸயன் ப்ரதிபா4ஸதே |**
**ததா2 ஸ்தூ2லாதி3கம் பா4ஸ்யம் பா4ஸயன் ப்ரதிபா4த்யயம் ||** 61

எவ்விதம் பிரகாசப்படுத்த வேண்டிய மேகம் முதலியவற்றை, சூரியன் பிரகாசிக்கச் செய்துகொண்டு பிரகாசிக்கிறானோ, அவ்விதம் பிரகாசப்படுத்த வேண்டிய ஸ்தூலம், ஸூக்ஷ்மம் முதலிய சரீரங்களை பிரகாசிக்கச் செய்து கொண்டு இந்த ஆத்மா பிரகாசிக்கின்றான்.

**ஸர்வப்ரகாசகோ பா4நு: ப்ரகாச்யைர் நைவ தூ3ஷ்யதே |**
**ஸர்வப்ரகாசகோ ஹ்யாத்மா ஸர்வைஸ்தத்3வத் ந தூ3ஷ்யதே ||** 62

எவ்விதம் எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன், பிரகாசிக்கப் படும் பொருள்களால் கெடுக்கப்படுவதில்லையோ, அதுபோல எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் ஆத்மாவானது எப்பொருள்களாலும் கெடுக்கப்படுவதில்லை.

(எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் தன்னால் பிரகாசிக்கும்படி செய்யப்பட்ட வஸ்துக்களின் குண தோஷங்களை அடையாதது போல் எல்லா வற்றையும் பிரகாசிக்கச் செய்யும் ஆத்மா எந்த வஸ்துக்களுடைய குண தோஷங்களையும் அடைவதில்லை).

**முகுரஸ்த2ம் முக2ம் யத்3வத் முக2வத் ப்ரத2தே ம்ருஷா |**
**புத்3தி4ஸ்தா2பா4ஸகஸ் - தத்3வதா2த்மவத் ப்ரத2தே ம்ருஷா ||** 63

**முகுரஸ்த2ஸ்ய நாசேன முக2நாசோ ப4வேத் கத2ம் |**
**பு3த்3தி4ஸ்தா2பா4ஸநாசேன நாசோ நைவாத்மந: க்வசித் ||** 64

எவ்விதம் கண்ணாடியில் பிரதிபலித்த முகமானது பொய்யாக, முகம்போல் தோன்றுகின்றதோ, அதுபோல புத்தியில் பிரதிபிம்பிக்கின்ற ஜீவன் ஆத்மாவைப் போன்று பொய்யாகத் தோன்றுகின்றது.

கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பத்தின் நாசத்தினால் முகத்தின் நாசமானது எவ்விதம் உண்டாகும்? உண்டாகாது. (அதுபோல்) அந்தக்கரண பிரதிபிம்ப நாசத்தினால், ஒருகாலும் ஆத்மாவினுடைய நாசமானது உண்டாகாது.

**தாம்ர கல்பிததே$^{3}$வாதி$^{3}$ஸ: தாம்ராத$^{3}$ன்ய இவ ஸ்பு$^{2}$ரேத் |**
**ப்ரதிபா$^{4}$ஸ்யாதி$^{3}$ரூபேண ததா$^{2}$த்மோத்த$^{2}$மித$^{3}$ம் ஜக$^{3}$த் ||** 65

எவ்வாறு செம்பில் (விக்ரஹமாகச்) செய்யப்பட்ட தேவதை முதலியவை செம்பைக்காட்டிலும் வேறான துபோல் தோன்றுமோ, அவ்வாறே ப்ரமேயம். முதலான ரூபமாக ஆத்மாவிலிருந்து உண்டான இந்த பிரபஞ்சமும் (வேறானது போல் தோன்றுகிறது.) (ப்ரமேயம் - அறியப்படும் பொருள். இங்கு ப்ரபஞ்சம்; ப்ரமாதா - அறியும் ஜீவன்; ப்ரமாணம் - அறிவு.)

**ஈச ஜீவாத்மவத் பா$^{4}$தி யதை$^{2}$கமபி தாம்ரகம் |**
**ஏகோப்யாத்மா ததை$^{2}$வாயமீசஜீவாதி$^{3}$வன் ம்ருஷா ||** 66

**யதே$^{2}$ச்வராதிநாசேன தாம்ரநாசோ ந வித்$^{3}$யதே |**
**ததேச்வராதி$^{3}$நாசேன நாசோ நைவாத்மந: ஸதா$^{3}$ ||** 67

எவ்விதம் செம்பு ஒன்றான போதிலும், ஈச்வரன் போன்றும், ஜீவன் போன்றும் (பலவாக வெவ்வேறு ப்ரதிமைகளில்) தோன்றுகின்றதோ, அவ்விதமே இந்த ஆத்மாவானது ஒன்றான போதிலும் ஈச்வரன், ஜீவன் முதலியவைபோன்று பொய்யாகத் தோன்றுகின்றது.

எவ்வாறு ஈச்வரன் முதலிய உருவங்களின் நாசத்தினால், செம்பின் நாசம் உண்டாவதில்லையோ, அவ்விதம் ஈச்வரன் முதலியவர்களின் நாசத்தினால், ஆத்மா

விற்கு எப்பொழுதும் அழிவு உண்டாவதில்லை.

**அத்$^{2}$யஸ்தோ ரஜ்ஜுஸர்போ(அ)யம் ஸத்யவத் ரஜ்ஜுஸத்தயா |**
**ததா$^{2}$ ஜக$^{3}$தி$^{2}$த$^{3}$ம் பா$^{4}$தி ஸத்யவத் ஸ்வாத்ம ஸத்தயா ||** 68

எவ்விதம் கயிற்றில் ஆரோபம் செய்யப்பட்ட (கல்பிதமாக ஏற்றி வைக்கப்பட்ட) பாம்பானது கயிற்றிலுள்ள ஸத்தையால் (கயிறு என்பது உண்மையாக உள்ள ஒன்றாக இருப்பதால்) (தானும்) உண்மையானது போன்று தோன்று கின்ற தோ, அவ்விதம் இந்தப் பிரபஞ்சம் தன் ஆத்மாவின் ஸத்தையினால் உண்மையானது போல் தோன்றுகின்றது.

**அத்$^{4}$யஸ்தாஹேரபா$^{4}$வேந ரஜ்ஜுரேவாவசிஷ்யதோ |**
**ததா$^{2}$ ஜக$^{3}$த$^{3}$பா$^{4}$வேன ஸதா$^{3}$த்மைவாவசிஷ்யதே ||** 69

எவ்வாறு ஆரோபிக்கப்பட்ட பாம்பினுடைய இல்லாமையால் (கயிறு பாம்பல்ல என்று தெரிந்தபின்) கயிறு மட்டும் மிஞ்சுகின்றதோ, அவ்விதம் ஜகத்தின் இன்மையால் உண்மையான ஆத்மா மாத்திரம் மிஞ்சுகின்றது.

**ஸ்ப2டிகே ரக்ததா யத்3வதுபாதே4ர் நீலதாம்ப3ரே |**
**யதா2 ஜகதி3த3ம் பா4தி ததா2 ஸத்யமிவாத்3வயே ||** 70

**ஸ்ப2டிகே ரக்ததா மித்யா ம்ருஷா கே2 நீலதா யதா2 |**
**ததா2 ஜகதி3த3ம் மித்3யா ஏகஸ்மிந்நத்3வயே மயி ||** 71

எவ்விதம் உபாதியின் ஸம்பந்தத்தினால் ஸ்படிகமணியில் சிவப்பும், எவ்விதம் ஆகாயத்தில் நீலமும் தோன்றுகின்றனவோ, அவ்விதம் இரண்டற்ற ஆத்மாவில் இந்தப் பிரபஞ்சம் உண்மையானது போல் தோன்றுகின்றது.

ஸ்படிக மணியில் சிவப்பு எவ்விதம் தோற்றமோ, ஆகாயத்தில் நீலநிறம் எவ்விதம் தோற்றமோ, அவ்விதம் ஒன்றான தும் இரண்டற்றதுமான என்னிடத்தில் (ஆத்மாவில்) இந்தப் பிரபஞ்சம் பொய்த் தோற்றமே.

**ஜீவேச்வராதி4பா4வேன பே4தம் பச்யதி மூட4தீ: |**
**நிர்பேதே3 நிர்விசேஷ(அ)ஸ்மின் கத2ம் பே4தோ3 ப4வேத்3-த்4ருவம் ||** 72

அக்ஞானி ஜீவன், ஈச்வரன் முதலான ரூபமாக வேற்றுமையைப் பார்க் கிறான். பேதமற்றதும் ஒருவித தன்மையும் அற்றதுமான, இந்த ஆத்மாவில் எவ்விதம் பேதம் இருக்கும்? (இருக்காது,) இது நிச்சயம்.

**லிங்க3ஸ்ய தா4ரணாதே3வ சிவோயம் ஜீவதாம் வ்ரஜேத் |**
**லிங்க3நாசே சிவஸ்யாஸ்ய ஜீவதாவேசதா குத: ||** 73

இந்த சிவன் (பரமாத்மா) லிங்க (காரண) சரீரத்தை தரிப்பதினாலேயே ஜீவத்தன்மையை அடைகிறான். லிங்கசரீரம் நாசம் அடைந்த பொழுது, இந்த பரமாத்மாவிற்கு, ஜீவ ரூபமான ஆவேசமானது எவ்விதம் ஸம்பவிக்கும்? (ஸம்பவிக்காது.)

**சிவ ஏவ ஸதா3 ஜீவோ ஜீவ ஏவ ஸதா3 சிவ: |**
**வேத்யைக்யமநயோர் யஸ்து ஸ ஆத்மஜ்க்ஞோ ந சேதர: ||** 74

ஜீவன் எப்பொழுதும் சிவனே (பரமாத்மாவே). பரமாத்மா எப்பொழுதும் ஜீவனே. எவன் இந்த ஜீவாத்மா - பரமாத்மா இருவர்களுக்கும் ஒருமையை அறிகிறானோ, அவனே ஆத்மாவை அறிந்தவன். மற்றவரல்லர்.

**க்ஷீர யோகா3த் யதா2 நீரம் க்ஷீரவத் த்3ருச்யதே ம்ருஷா |**
**ஆத்ம யோகா3தநாத்மா(அ)யமாத்மவத் த்ருச்யதே ததா3 ||** 75

பாலின் சேர்க்கையினால் ஜலமானது பால்போன்று பொய்யாக எவ்விதம் தோன்றுகின்றதோ, அவ்விதம் ஆத்மாவின் ஸம்பந்தத்தினால், இந்த ஆத்மாவிற்கு வேறான சரீரம் முதலியவை ஆத்மாவைப்போன்று காணப்படுகின்றது.

**நீராத் க்ஷீரம் ப்ருத$^{2}$க்க்ருத்ய ஹம்ஸோ ப$^{4}$வதி நாந்யதா$^{2}$ ।**
**ஸ்தூ$^{2}$லாதே$^{2}$: ஸ்வம் ப்ருத$^{2}$க்க்ருத்ய முக்தோ ப$^{4}$வதி நாந்யதா$^{2}$ ॥** 76

ஜலத்திலிருந்து பாலை வேறுபடுத்துவதால் (புள்ளினத்தில் ஒன்று) ஹம்ஸ பக்ஷியாக ஆகின்றது. அவ்வி தமில்லாவிடில், ஹம்ஸ பக்ஷியாக ஆவதில்லை. இதுபோன்று ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களிலிருந்து ஆத்மாவை வேறு படுத்தித் தெரிந்துகொள்வதால் (ஒரு ஜீவன்) மோக்ஷ மடைந்தவனாக ஆகிறான். அவ்விதமில்லாவிடில் முக்தனாக ஆகமாட்டான்.

**க்ஷர நீர விவேகஜ்ஞோ ஹம்ஸ ஏவ ந சேதர: ।**
**ஆத்மாநாத்ம விவேகஜ்ஞோ யதிரேவ ந சேதர: ॥** 77

ஹம்ஸம் தான் பாலையும், நீரையும் பிரித்துத் தெரிந்து கொள்ளும். வேறு (பக்ஷி) ஒன்றும் அறிந்து கொள்ளாது. அது போல, யதி தான் ஆத்மாவையும், அநாத்மாவையும் பிரித்துத் தெரிந்து கொள்வான். மற்றவர் அல்லர்.

**அத்$^{4}$யஸ்த சோரஜ: ஸ்தா$^{2}$ணோர் விகார: ஸ்யாத் நஹி க்வசித் ।**
**நாத்மநோ நிர்விகாரஸ்ய விகாரோ விச்வஜஸ்ததா$^{2}$ ॥** 78

கட்டையில் ஆரோபம் செய்யப்பட்ட (கற்பனையாக ஏற்றிவைக்கப்பட்ட திருடனிடம் உண்டான மாறுதல் (குணதோஷங்கள்), கட்டைக்கு ஒரு போதும் உண்டாகாது. அவ்விதமே மாறுதலற்ற (ஏகரூபமான) ஆத்மாவிற்கு, பிரபஞ்சத்தில் உண்டான மாறுதல் இல்லை. (மரத்தாலான தூணைத் திருடன் என்று கல்பித்துக்கொண்டு அந்தத் திருடனிடம் ஒருவர் எண்ணும் மாறுதல்கள் வாஸ்தவத்தில் தூணுக்கு இல்லாதது போல, பிரம்மத்தைப் பிரம்பஞ்சமாகக் கல்பித்துக் காணும் மாறுதல் பிரம்மத்தைத் தொடா.)

**ஜ்ஞாதே ஸ்தா$^{2}$ணௌ குதச்சோரச்சோராபா$^{4}$வே ப$^{4}$யம் குத: ।**
**ஜ்ஞாதே ஸ்வஸ்மின் குதோ விச்வம் விச்வாபா$^{4}$வே-குதோ(அ)கி$^{2}$லம் ॥** 79

கட்டையைக் (கட்டையென்று) அறிந்த பிறகு (அதில் தோன்றிய) திருடன் ஏது? திருடன் இல்லாதபொழுது பயம் எவ்விதம் ஏற்படும்? (இவ்வாறு) ஆத்ம ஸ்வரூபமானது அறியப்பட்ட பொழுது பிரபஞ்சம் எவ்விதம்? பிரபஞ்சம் இல்லாத பொழுது மற்றவை எல்லாம் ஏது?

**கு$^{3}$ண வ்ருத்தி த்ரயம் பா$^{4}$தி பரஸ்பர விலக்ஷணம் ।**
**ஸத்யாத்ம லக்ஷணே யஸ்மின் ஸ ஏவாஹம் நிரம்சக: ॥** 80

ஸத்ய ஸ்வரூபமாகிய எந்) த (ஆத்மாவி) னிடத்தில் ஒன்றுக்கொன்று மாறுதல் உள்ள (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற) குணங்களினால் உண்டான மூன்று விருத்திகளும் (குண பரிணாமங்களும்) விளங்குகின்றதோ அவயவமற்ற (பகுக்கப்படாத முழுமையான) அது (ஆத்மா)வே நான்.

**தே$^{3}$ஹ த்ரயமித3ம் பா$^{4}$தி யஸ்மின் ப்$^{3}$ரஹ்மணி ஸத்யவத் |**
**ததே$^{3}$வாஹம் பரம் ப்$^{3}$ரஹ்ம தே$^{3}$ஹத்ரய விலக்ஷண: ||** 81

எந்த பரமாத்மாவினிடம் இந்த (ஸ்தூலம், ஸுக்ஷ்மம், காரணம் என்ற) மூன்று சரீரமும் உண்மையானது போல் தோன்றுகின்றதோ, அந்த பரப்ரம்மமே மூன்று சரீரங்களுக்கும் வேறான நான்.

**ஜாக்$^{3}$ரதாதி$^{3}$ த்ரயம் யஸ்மின் ப்ரத்யகா$^{3}$த்மனி ஸத்யவத் |**
**ஸ ஏவாஹம் பரம் ப்$^{3}$ரஹ்ம ஜாக்$^{3}$ரதா$^{3}$தி$^{3}$விலக்ஷண: ||** 82

எந்த உள் வஸ்துவான ஆத்மஸ்வரூபத்தில் ஜாக்ரத் (ஸ்வப்னம், ஸுஷுப்தி) முதலிய மூன்றும் உண்மை போன்று (தோன்றுகின்றதோ) ஜாக்ரத் முதலான வற்றுக்கு வேறான அந்தப் பரப்ரஹ்மமே நான்.

**விச்வாதி$^{3}$க த்ரயம் யஸ்மின் பரமாத்மனி ஸத்யவத் |**
**ஸ ஏவ பரமாத்மாஹம் விச்வாதிக விலக்ஷண: ||** 83

எத்த பரமாத்வாவினிடம் விச்வன் (தைஜஸன், ப்ராக்ஞன்) ஆகிய (முறையே ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி அவஸ்தாபிமானிகள்) மூவரும் உண்மையானவர்கள் போன்று தோன்றுகிறார்களோ, விச்வன் முதலானவர்களுக்கு வேறான அந்த பரமாத்மாவே நான்.

**விராடா$^{3}$தி த்ரயம் பா$^{4}$தி யஸ்மின் ஸாக்ஷிணி ஸத்யவத் |**
**ஸ ஏவ ஸச்சிதானந்த3 லக்ஷணோஹம் ஸ்வயம்ப்ரப: ||** 84

ஸாக்ஷியான. எந்த ஆத்மாவிடம் விராட், ஹிரண்யகர்ப்பன், ஈச்வரன் என்ற மூவரும் உண்மை போன்று தோன்றுகின்றன ரோ ஸத், சித் ஆனந்தங்களை ஸ்வரூபமாகக் கொண்டவரும், ஸ்வயம்பிரகாசருமான அந்த பரமாத்வே நான்.

ஸாக்ஷியான எந்த பரமாத்மாவிடம் ஸமஷ்டியான ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீராபிமானிகளான விராட்புருஷன், ஹிரண்யகர்பன், அந்தர்யாமி என்ற மூவர்களும் தோற்றமோ, ஸச்சிதானந்த ரூபனும், ஸ்வயம் பிரகாசனுமான அந்த பரமாத்மாவே நான்.

(ஜீவனுக்கு ஜாக்ரத் - ஸ்வப்ந - ஸுஷுப்தி போலவே, ஸகல ஜீவ ஸமூகத் திற்கும் காரணமான ஸகுணப்ரம்மத்துக்கு ஸ்திதி - - ஸ்ருஷ்டி - ஸம்ஹாரம்

என்பன. முறையே இம்மூன்றையும் ஆற்று கையில், ஸகுணப்ரஹ்மம் விராட், ஹிரண்யகர்பன், ஈச்வரன் எனப்படுகிறது.

